உ

திருச்சிற்றம்பலம்.

முருகவேள் துணை.

# திருச்செந்திற்றிகழ்மணிமாலை





ஆக்கியோர்

இராமனுசம்புதூர் சைவத்திரு

சிவஞானம்பிள்ளையவர்கள் புதல்வர்,

புளியங்குளம் போர்டுபாடசாலை தலைமையாசிரியர்

சிவசுப்பிரமணிய பிள்ளை.

அணா 4.

உ

திருச்சிற்றம்பலம்.

# முகவுரை.






"பிறவிப் பெருங்கடனீந்துவர் நீந்தார்
இறைவனடி சேராதார்" என்ற தெய்வப் புலமையுந் திருவருண் ஞானமுங் கைவரப்பெற்ற சைவத்திருவாளராகிய திருவள்ளுவதேசிகர் உலக முய்யவுதவிய அமுத மொழியின்படி இறைவன் றிருவடியை யெப்போதுஞ் சிந்திப்பது வேண்டற் பாலதன்றோ?

"நிலை பெறுமாறெண்ணுதியேல் சென்சேர்வா நித்தலு மெம்பெருமானுடைய கோவில்புக்கு; புலர்வதன் முன்னலகிட்டு மெழுக்குமிட்டுப் பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடி"

என்று அப்பர்பெருமான் தமிழ் மறையிற் புகன்றவணம் உள்ளம் நிலை பெற்று வணங்க வேண்டுமானால் பாமாலை பாட வேண்டியதின்றியமையாததல்லவா?

அப்பாமாலை,

"தம்மையேபுகழ்ந்திச்சைபேசினுஞ்சார்வினுந்தொண்டர்தருகிலாப்
பொய்மையாளரைப்பாடாதேஎந்தைபுகலூர்பாடுமின்புலவீர்காள்
இம்மையேதருஞ் சோறுங்கூறையுமேத்தலாமிடர்கெடலுமாம்
அம்மையே சிவலோகமாள்வதற்கியாதுமையுறவில்லையே"

எனச் சுந்தரமூர்த்திகள் தமிழ் மறையிற் புகன்றபடி தோன்றியழியுந் தன்மையரைப் பாடிப் பயனில்லை யாதலால், கலியுகத்துக்குத் தெய்வங் கந்த வேளே யென்றவான்றோர் கூற்றுக் கிலக்காக முருகபிரான் றிருச்செந்தின் மா நகரின் கண்ணேயெழுந்தருளியடியார்களுக்கு வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய் என்ற ஆன்றவாக்கை யுறுதிப்படுத்தா நிற்பது கண்கூடே. "உன்னையே வணங்குங்கையா லொருவரை வணங்கமாட்டே"



...ன்று கீசபக்தியா ... ர் புகன்றபடி யடியேனுங்குளறிக்குளறிக் கு...னைப்பாடுதலே கடமை... மவாம... கொண்டு பாடு ...து வழக்கம்.

"ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரோ" என்ற அப்பர்பெருமான் திருவாய் மொழிப்படி, "அவனருளாலே யவன்றாள் வணங்கும்" பாமாலை பாட வேண்டுமென்றும் அதற்குத் திருச்செந்திற்நிகழ்மணிமாலை யென்ற திருப் பேர்சூட்டவேண்டுமென்றும் உள்ளத்திலுள்கவும் பாடி நிறைவுறவுந் திருவருளியக்கியது.

"தம்மிற்பெரியார் தமராவொழுகுதல், வன்மையுளெல்லாந்தலை" என்ற தெய்வப்புலமையார் வாக்கின் வணம், எனது பெரியதகப்பனார் சவரிமங்கலம் புராணிகர் வித்வான் சைவத்திருவாளர் சிதம்பரவேலுப்பிள்ளையவர்கள் தவப்புதல்வர் கர்ணம் முத்துக்குமாரசுவாமியாபிள்ளையவர்கள் இந் நூலைப் பார்வையிட்டுச் சிலசீர்திருத்தஞ் செய்து சாற்றுகவியுந் தகவுரையுங் கொடுத்துதவினார்கள்.

பாளையங்கோட்டை அர்ச் சவேரியார் கல்லூரித்தலைமைத் தமிழ்ப்பண்டிதரும் திருநெல்வேலி தென்னிந்திய தமிழ்ச்சங்க அமைச்சருமான புலவரகம் பு. சி. புன்னைவனநாதமுதலியாரவர்கள் இந் நூலைப்பார்வையிட்டு இலக்கணவழுக்களைந்து ஆங்காங்கே சில சுவைகனிந்த சொற்களையமைத்து சாற்றுகவி கொடுத்த நன்னீர்மையை யானுன்னுந்தோறுமென்னுள்ளம் பூரிக்கின்றது.

ஆத்தூர் சைவத்திருவாளர் திருச்சிற்றம்பலம் பிள்ளையவர்கள் திருமகனார் பென்சன் தாலுகா சிரஸ்தார், பன்னூல்களுக்கு ஆசிரியர், வரகவி, சைவத்திருவாளர் இராமலிங்கம் பிள்ளையவர்கள் இந் நூல் முழுவதும் பார்வையிட்டு, என்வாக்கைத் தழுவிச்சீர் திருத்தஞ் செய்த பேருதவி என்றென்றும் என் கண்ணுங்கருத்தும் விட்டகலா. அன்னார்களன்போடு சாற்றுகவியுமுன்னுரையுங் கொடுத்துதவியது பாராட்டற் பாலதே.

மேற்கண்ட மூன்று புலவர் திலகங்கட்கும் எனது அன்பார்ந்த வணக்கமுரித்தாகின்றது.

மேலும் உடன்குடி சைவப்பிரகாச வித்தியாசாலை ஆசிரியர் திருவாளர் சத்தரிசி அய்யரவர்கள், வல்லநாடு போர்டுபாடசாலை ஆசிரியர் சைவத் திருவாளர் வீரலெட்சுமிநாதபிள்ளையவர்கள், பேய்க்குளம் போர்டுபாட சாலை தலைமையாசிரியர் திருவாளர் கிருஷ்ண அய்யரவர்கள், சிவசைலம் சைவத்திருவாளர் முத்துக்கிருஷ்ணபிள்ளையவர்கள் புளியங்குளம் சைவத் திருவாளர் அ. கயிலாசம் பிள்ளையவர்கள், எனது சிறிய தகப்பனுர் ராமா னுசம் புதூர் சண்முகம்பிள்ளையவர்கள் சேர்மாதேவி சைவத்திருவாளர் ஆவுடையப்பபிள்ளையவர்கள் திருமகனும் பாளையங்கோட்டை அர்ச்சவேரி யார் கல்லூரி சீனியர் பீ. எ. வகுப்பு மாணுக்கருமான சைவச்செல்வர் இராமசாமியாபிள்ளையவர்கள், சிவகளை திருவாளர் S.N. அடைக்கலம்பிள்ளை அவர்கள் உள்ளிட்ட யாவரும் சாற்றுகவிதந்து தவியதற்கு எனது அன் பார்ந்த வந்தன முரித்தாகின்றது.

இந் நூலைவெளியிடும்படி விரும்பிக்கொண்ட கருங்கடல் சைவத்திரு வாளர் பேச்சில் முத்துப்பிள்ளையவர்கள் புளியங்குளம் சைவத்திருவாளர் கந்தசாமியாபிள்ளையவர்கள் ஷையூர் சைவத்திருவாளர் அ. கயிலாசம் பிள்ளை அவர்கள் உள்ளிட்ட யாவருக்கும் எனது வணக்கம் உரித்தாகின்றது.

இந்நூலை வெளியிடும்படி பொருளுதவிசெய்த புளியங்குளத்திலும் கருங்கடலிலும்உள்ளநண்பர்களுக்கும் எனது போற்றுதல் உரித்தாகின்றது.

இந் நூலைப் பாடுதற்கு நற்றினம் வைத்துக் கொடுத்த கருங்கடல் கர்ணம் சைவத்திருவாளர் காந்திமதிநாதபிள்ளையவர்களுக்கு எனது வணக்கம் உரித்தாகின்றது.

இந் நூலையச்சியற்றி மிகவும் அழகாகத்திகழும்படி செய்த ஸ்ரீவைகுண் டம் சிவகாமி பிரிண்டிங் பிரஸ் சொந்தக்காரர் தூத்துக்குடித் தாலுகாப் போர்டு பிரசிடெண்டு வேளூர் சைவத்திருவாளர் சங்கரலிங்கம் கவிராஜர் அவர்கள் தவப்புதல்வர் சைவத்திருவாளர் சுப்பிரமணியபிள்ளையவர்களுக்கும் அவர்கள் துணையாளர் கட்கும் எனது வந்தனம் உரித்தாகின்றது.

இங்ஙனம்

சி. சிவசுப்பிரமணியன்,

நூலியற்றியோன்.

முருகன்றுணை.

# முன்னுரை.



கடல் சூழ்ந்த நெடியவுலகத்தின்கண் குமாரக்கடவுளைத் தொழுவோரே கௌமாரரெனப்படுவர். அக்கடவுளை வழிபடுதற்குரிய சமயமே கௌமாரமெனப்படும்.

கௌமார தீட்சை பெறுதல், சந்தியாவந்தனை, சடாட்சரசெபம், தியானம், தோத்திரபாராயணம், கந்தபுராண முதலிய புனித நூற்களைக் கற்றல், கேட்டல், சிந்தித்தல், முருகப்பெருமானின் திருவருட்டிறத்தை வியந்து கவிமாலை புனைதல் ஆகிய சற்கருமங்களை நாடோறும் நியமமாகச் சிறிது பொழுதேனும் அனுட்டித்துவருதலே கௌமார சமயிகளுக்குரிய லட்சணங்களாம்.

முருகக்கடவுளானவர் செந்தமிழ்த்தெய்வமாயிருப்பதால் தனது பெருமையைச் செந்தமிழ்ப்பாமாலைகளால் போற்றுந் தொண்டர்கள்பால் மிகுந்த கருணையுடையவரென்பதற்கு "பாவலர்க்கெளியாயோலம்" என்றவான்றோர் கூற்றே சான்றாகும். இக்காரணம் பற்றியே தெய்வப்புலமைசாலும், திருவருட் செல்வமிக்க பெரியாரெல்லாம், திருப்புகழ், திருவகுப்பு, கந்தரனுபூதி, கந்தர்கலிவெண்பா, சட்டிகவசம், திருமுருகாற்றுப்படை முதலிய அரும்பெரும் நூல்களை அக்காலத்திலியற்றிச் செவ்வேளின் றிருவருளைப் பெற்று உய்ந்ததுமன்றி இப்பேருலகத்தையு முய்யுமாறு செய்தனர்.

அன்னார் கொள்கையைப் பின்பற்றிக்கலிமிகுந்த விக்காலத்தும் தமிழுணர்ச்சியும் அன்புமுடைய சீலர்கள் அநேகர் எம்பெருமானை ஆராமை மேலிட்டுக் கசிந்து கசிந்து பாடித் துதிக்கும் பாக்கியமே பெறுதற்கரிய பேறாகக்கருதித் தங்கள் கால மெல்லாம் தவப்பொழுதாகக் கழித்துக்களிப்புற்றிருப்பதும், அத்தகைய சீலர்களை அக்குமரக்கடவுளின் றிருவருளே நின்றியக்கி வாச்சாம கோச்சரமாய்ப்பாடுமாற்றலையளித்து உய்வித்தருள் புரிகின்றதும் இவ்வுலகமறியாததன்று.

அன்னோரன்ன கௌமாரவர்க்கத் தொண்டும், புலமையுமுடைய, இந் நூலாசிரியர் பரம்பரையாய் முருகவேட்கு அடித்தொண்டு புரியும் மரபின ராதல் பற்றி, குழவிப்பருவத்தே முருகப்பிரானிடத்தில் பத்தி முதிர்ந்து அவனைப் பாடும் வேட்கை மிகுந்ததின் வயமாய்ப் பாடு மாற்றல் படைத்து இந் நூலையியற்றியிவ்வுலகுக்குதவினர். இந் நூல் தோத்திர ரூபமாய்ச் சொன்னயமும் பொருணயமும் நிறைந்து பாராயணஞ் செய்பவர்களுக்கு முருகக்கடவுளின் றிருவருள் எளிதிற்சித்திக்குமியல்புடைத்தாயிருக்கின்ற தென்பதை இந் நூலைக்கற்கும் அன்பர்கள் நன்குணர்வார்கள். இதைப்பாடித் தந்த பிள்ளையவர்களின் கௌமாரபக்தியும், புலமைத்திறமும் வியக்கத் தக்கன.

இங்ஙனம்,

ஆத்தூர். 21—4—31

A. T. இராமலிங்கம்பிள்ளை,
பென்சன்தாலுகா சிரஸ்தார்.

உ

செந்திற்றெய்வமேதுணை

# தகவுரை.



திருவாழ்ந்திலகு நன்னுவலந்தீவில், மருமலிதென்றமிழ்ப்பாண்டி நாடதனில் பொருனைமாநதியின் அருகினிலோர்பால் நந்தூரலைவாய் சிந்துவின் பாங்கர் செயந்தி புரமென்னுந் திருச்செந்தின் மாநகரின்கண் வள்ளிதெய்வானை சமேதராய்த்திருக்கோவில் கொண்டெழுந்தருளியிரா நின்ற கலியுகவரதனுங்கந்தவேண்மீது அன்பு பூண்டொழுகும் முன்னை யோர்போலப்பத்தி செலுத்தி வருபவரும் எனது சிற்றன்னையின் புதல் வரும், புளியங்குளம் போர்டு பாடசாலைத்தலைமையாசிரியருமாகிய சிவசுப் பிரமணியபிள்ளை, எந்த நாளினுங் கந்தவேள்மீது பாக்கள் புனைவதும் ஆக்கம் பெறுவதுமே முறைமையாகக் கொண்டு வருவதையறிந்த சில நண் பர்களும் யானும் விரும்பியவண்ணம் பொன்மாலை மணந்தராபூமாலை வாடுறு மெனவுன்னி நன்னுவினிடத்துச் சொன்மலர் கொண்டு அன்பெனும் நாரினிற் கோத்து இத்திருச்செந்திற்நிகழ்மணிமாலை யென்னும் பாமாலை புனைந்து முருகவேளுக்கணிந்திருக்கின்றனர்! ஷை பாமாலை அதன்பெயருக் கேற்ப நூன்முறை பிறழா நுண்மையாம் பொருளும், பான்முகமாறுப்பா லரும் விரும்பும் பண்புமுடைத்தாயிருப்பது வெள்ளிடைமலையே. ஆற்றல் சால்புலவன் எற்றமுற்கூறும் சாற்றுக்கவியானுற்றிய போதும் என்னுளந் தன்னிலுன்னியபடியே பன்னுதலிலதாய், நன்னயத் தகவுரை யெழுத நானுன்னினேன். இப்பாமாலை சண்முகக்கடவுளின் மீது பத்தி செலுத்த விழைவோர் பாராயணஞ் செய்து போற்றற்குரியது!

இந்நூலும், இந்நூலையாக்கியோரும், இதனைப் பாராயணஞ் செய் வோரும் மங்காநலம் பெற்றுவாழுமாறு எல்லாம் வல்ல வெம்மிறைவனை மனமொழி மெய்களார வாழ்த்திவணங்கும்.

சி. முத்துகுமாரசுவாமியாபிள்ளை,

கர்ணம், சவரிமங்கலம்.

# சாற்றுகவிகள்.



திருச்செந்தூர்த் தண்டகமாலை முதலிய பன்னூலாசிரியரும் பென்சன் தாலுகா சிரஸ்தாருமாகிய ஆத்தூர்-கௌமாரபக்தி இராமலிங்கம் பிள்ளையவர்களியற்றியவை.

கண்படைத்த பலனெல்லாங் கந்தனருட் டிருவுருவே காணலென்றும்
பண்படைத்த பலனெல்லாம் பாவகியி னருட்டிறமே பாடலென்றும்
மண்படைத்த வேதன்முதற் றேவரொலா நாடோறும் வாழ்த்துவாரேல்
புண்படைத்த மானிடர்கட் கவனடிக ளல்லாதுபுகல்வேறுண்டோ. (1)

குன்றுகடோ றனந்தவிளை யாடல்களைப் புரிந்தாலுங் குமரமூர்த்திக்
கென்றுமுல வாமகிழ்ச்சி தருமசல மிறையவர்த மிறையென்னுளுஞ்
சென்றுதொழுஞ் சந்தவளா யெனப்புலவர் செப்புவது தெளிந்தேயந்தக்
குன்றுறையுஞ் செவ்வேட்குத் திகழுமணி மாலையெனக் கூறுங்கோவை. (2)

செந்தமிழா லன்புகனிந் தள்ளூறச் செந்தேன்சொட் டிடவாராமை
முந்தவரு ளமுதிரசஞ் செவியார வன்பர்முகந் துண்டுதேக்கச்
சிந்தையுறத் தரும்பான்மைச் செய்யுளிலக் கணவணிகள் செறிந்துகாண
வந்தனைசெய் தாறிருதோள் பொலியவனை நணிந்தருள்பெற் றுய்ந்தான்'
[ மாதோ (3)

எனக்கன்பன் றன்னடியை யென்னுயிர்க்குத் துணையாக வீயுஞ்செவ்வே
டனக்கன்ப னிளஞ்சிறுவர்க் கோதுவிக்கு நற்றரும நெறியே பூண்ட
வினர்க்கன்பன் சிந்தகமா ரோரிகக ரிருளொதுக்கு மெழிலார்ஞானந்
தனக்கன்ப னறிஞர்விழை சிவசுப்ர மண்யனெனுந் தக்கோன்றானே (4)

செந்தமிழைத் தேர்ந்தாலுந் தேனமுதாய்க் கவிபுனையுந் திறம்பெற்றாலுங்
கந்தனருட் கடல்படியக் கல்லாதார் கதிசிறிதுங் கருதற்பாற்றோ
நந்தமிறை யருட்குரிய ஞகவிவன் வாழ்தலினு னம்மோடேசம்
பந்தமிவர்க் கென்னுளு முரித்தாகக் குகனருள்பா லிக்குமன்றே (5)

## பாளையங்கோட்டை அர்ச். சவேரியார் கல்லூரி, தலைமைத் தமிழ்ப்பண்டிதரும், திருநெல்வேலி தென்னிந்திய தமிழ்ச்சங்க அமைச்சருமான, புலவரகம், சைவத்திரு, பு. சி. புன்னைவனநாத முதலியாரவர்கள் இயற்றியன.

முக்குறும் பெறிந்த முனிவரும் வணங்கு முதுதமிழ்ப் புலவனுய் மன்னிப்
பக்குவ ருளத்தா மரைமலர் விக்கும் பருதியாம் முருகனந் தேவார்
திக்கெலாம் புகழும் மூவிரு தலத்திற் செயந்திமா நகர்தனிச் சிறப்பை
மிக்கவர் நவிலும் பெற்றியிற் செந்திற் நிகழ்மணி மாலையா வேய்ந்தான் (1)

வேய்ந்தசொல் வேந்தன் யாரெனின் வேட்கே விழைந்தசொல் மாலைகள் [தொகுத்துப்
பாய்ந்துறும் அன்பு நீரினல் லுளச்செய் பல்கறக் கதிர்தாப் படுத்தோன்,
ஆய்ந்தநல் லறிஞர் அறிசிவ ஞானம் அருள்சிவ சுப்பிர மணியன்
வாய்ந்தசீ ராமா னுசம்புதூ ராளன் வளர்புளி யங்குளத் தாசான், (2)

இன்னவன் செய்யுள் நடைத்திறம் இசைக்கின் இனிய வை தருப்பசன் [னெறியே
மன்னுமற் றன்னம் பருகுபா லென்ன வயங்குசொற் பொருளிசை யுவமம்
கன்னல்நற் பாகிற் கண்ணுதல் அடியார் கவின்வர லாறுதத் துவங்கள்
நன்னய, நீதி, மொழிகள்பா,லர்க்கும்,நலஞ்செய்தே இருமையும் நல்கும் (3)

## வெண்பா.

முருகனஞ் செந்தி முதல்வன் அருளை
உருகுமெய் அன்பர் உளங்கொண் — டிருவினையைக்
கல்ல மருந்தாக் கழறிம் மணிமாலைச்
சொல்லெவர்க்கும் நன்மைதருஞ் சொல். (4)



## சவரிமங்கலம், கர்ணம். சைவத்திரு முத்துக்குமாரசுவாமியாபிள்ளை அவர்களியற்றியன.

மாதங்க முகற்கிளையான் செயந்திநகர்க் கிறையடியார் மனத்துட்டோனறு
மாதங்கந் தனைத்தவிர்த்தான் றனதுபுகழ் மாலைதனை வையமீன்ற
மாதங்க மிடனுக்கொண் டுறைபவன்ற னருளதனல் மகிழ்வாய்த்தந்தான்
மாதங்க மேனியுளார் வாழ்புளிய நகரினன்சொல் வண்மையோனே. (1)

அன்னவன்யா ரெனிற்சைவ நெறிக்கழக நிறுவியுய ரறிஞர்போற்றும்
மன்னவன்கயி லாசவேட் கன்புடையான், கலையுதவு வள்ளலென்றன்
பின்னவனற் சிவசுப்ர மண்யவேள் செயந்திநகர்ப் பெம்மான்யார்க்கும்
முன்னவன்றன் சீர்த்திதிகழ் மணிமாலை தனையன்பால் மொழிந்தான்
[மாதோ. (2)

## உடன்குடி சைவப்ப்ரகாசவித்தியாசாலை ஆசிரியர், திரு சப்தரிசி அய்யரவர்களியற்றியன.

பொன்மலை யன்ன மணிதிகழ் செந்திற் புரமுமிக
முன்னயன் றாதையர் வேண்டிட வொன்றை மொழிபான்மேல்
நன்னயமா மெகின் மாநகர்க் கங்கை நயன்குலத்தோன்
துன்னரும் புண்ணிய வேள்சிவ ஞானச்சுதமணியே. (1)

சீர்திக ழுஞ்சிறு பாலர்க ளுள்ளத் திமிரமதைப்
பேர்புக ழும்படி நீக்கநன் னூல்களைப் பேசுவிக்கும்
ஏர்வள ராசிரி யன்சிவ சுப்பிர மண்யனிசை
தேர்வளர் செந்திற் றிகழ்மணி மாலையைச் செப்பினனே. (2)

மன்னிய நல்வள மாலையை யோர்பவர் வளந்தருஞ்சீர்
பன்னிய செல்வப் பலநல மேவிப் பயன்பெறுவார்
உன்னிய செந்திற் பதிநகர் வாழிய வோங்கடியார்
துன்னிய வாழிய தமிழ்மா மறைக டிலங்குறவே. (3)

## வல்லநாடு போர்டு பாடசாலை ஆசிரியர் சைவத்திரு சி.வீரலெட்சுமிநாத பிள்ளையவர்களியற்றியன.

செயந்தியினுஞ் சீரடியார் செம்மனத்துங் கோவில்கொளுஞ் செவ்வேட் [கன்பாய்
கயந்திகழும் புளியநகர் கவிச்சாலைப் போதகா சிரியன்போரா
னயந்திறைஞ்சுஞ் சிவஞான நற்றவத்தோ னருள்பால னிராமன்பின்னோன்
வயந்திருந்து பூதூர்நஞ் சிவசுப்ர மண்யனெனுந் தமிழின்வல்லோன். (1)

மணிதிகழ்பா மாலைதனை வயங்கவே சூட்டியருள் வழங்கப்பெற்றான்
திணிதிகழென் னுளமுமுரு கச்செயுமிப் பாப்பெருமை செப்பற்பாற்றே
வணிதிகழு மடியார்கட் காக்கமாம் பேறுதவ விஃதேயன்றிப்
பிணிதிகழா திவ்வுலகிற் பெருமைதரு நூலுளதோ பேசுங்காலை. (2)

## பேய்க்குளம் போர்டு பாடசாலை தலைமையாசிரியர் திரு கிருஷ்ணய்யரவர்களியற்றியது.

ஓராறு முகன் செயந்திக் கடியர்குறை தவிர்த்தாள வுவந்துற்றானென்
றோராருக் கோராறு வுதவினனற் றமிழ்மணிமா மாலையொண்ணூல்
சீரார்ரி ராமானு சம்புதூர் கங்கைகுலச் சிவஞானன்சேய்
பாரார்வேள் சிவசுப்ர மண்யனெனுந் திருவுடைய பாவலோனே.

## சிவசைலம் சைவத்திரு லே. முத்துக்கிருஷ்ணபிள்ளையவர்கள் இயற்றியவை.

கயங்காட்டு நோக்குடைய கன்னியிரு பான்மைவேற் காத்தெம் மண்ணல்
செயங்காட்டுந் திருச்செந்திற் றிகழ்மணிமா லையைமதிக்கிற் சிவஞானத்தின்
மயங்காட்டி யருள்கூட்டி மறலியொடு வாதுசெயவல்லோமென்று
புயங்காட்டும் பெரு நூலைப் பூவுலகுக் கினிதாகப் புகட்டினனே. (1)

தாராரும் புயவலியான் தண்புளிய நகராளி தமிழ் வேந்து
காராருங் குலதிலகங் கயிலாய வள்ளலொடுங் கழகஞ்சேர்த்த
சீராள னெங்கண்ணன் சிவசுப்ர மண்யனெனுஞ் செம்மலென்றுந்
தீராத பெரும்பிணியுந் தீரமருந் தீந்துவக்குந் திறமிக்கோனே. (2)

புளியங்குளம் சைவத்திரு அ. கயிலாசம் பிள்ளையவர்கள்
இயற்றியது.

திருவேங்கிறைபன் னிருகரமார் செயந்திப்பெருமான் திருப்புகழை
மருவேமலியச் சிவசுப்ர மணியன்வனைந்தான் மாலையது
கருவேபுகுத்தாக் கதிதரநற் கண்ணேகவிஞர் கலைபயியன்று
தருவே தனிப்பங்கெனக்கொள்ளத் தவப்பேறுவகை தருமாலே

இராமானுசம் புதூர் சைவத்திரு சு. சண்முகம்பிள்ளையவர்கள்
இயற்றியது.

நலம்பரவுஞ் சுவைகனிந்த நற்றமிழிற் றிருமுருக நாதன்மீது
வலம்பரவுந் திருச்செந்திற் றிகழ்மணிமா மாலைதனை வனைந்தேளந்தன்
குலம்பரவுஞ் சிவஞானக் குரிசில்சுதன் சிவசுப்ர மண்யக்கோமான்
நிலம்பரவுங் குகனடியார் நேர்ந்துளங்கொள் கவியமுதம் நிறைத்திட்டானே.

பாளையங்கோட்டை அர்ச். சவேரியார் கல்லூரி பீ. எ. சீனியர்
மாணவர் சைவச்செல்வர் ஆ. இராமசுவாமியாபிள்ளை இயற்றின
கட்டளைக் கலித்துறை.

கறையுடை யிவ்வுகம் காத்தருள் வேலன் கனைகடலின்
கரையுறை காவலன் சீரடி காணக் கயவரிருட்
கறையுடைக் கன்மனங் கண்டித் துருக்குங் கவிசெயுமக்
கரையுடையானளித் தான்மணி மாலை கவினுறவே. (1)

செந்திற் றிகழ்மணி மாலைசெய் தானற் சிவஞானம்
தந்தருள் பாலன் தகைமைச் சிவசுப் பிரமணியன்
பந்தங் கெடுத்துயர் வீட்டினைப் பாலித் தருள்புரிதற்
கிந்நன் மாலை முருகவேள் என்பார்க கிதஞ்செயுமே. (2)

## சிவகலை திருவாளர் S. N. அடைக்கலம் பிள்ளையவர்களியற்றியது.

---

அறமாதி நான்கின்னே யடைந்திடுவா னலைவாய்பாலருள்வேற் கந்தன்
றிறமாதி யெடுத்தோது மனுசநகர்ச் சிவஞானன் சேயாந் தூயன்
மறமால்தீர் சிவசுப்ர மணியனுரை திகழ்மணிமா மாலையென்றும்
புறமாயை யோட.கமாமாயைதவிர்த் தருளுமதைப் புகலுவோர்க்கே.

